# பிங்களவத்ஸர மங்களமாலிகை.

# ஸ்ரீ ராமாநுஜ வைபவ ஸங்க்ரஹம்

**(குறிப்பு.) கீழ் இதழ்கள்நான்கில் பகவத் ராமாநுஜருடைய [எம்பெருமானாருடைய] வைபவத்தை விரிவாகப் படித்தீர்கள், அதைச் சுருக்கமாக இவ்விதழ்ஒன்றிலேயே படிக்கத்தருகிறோம்.**

960 ஆண்டுகடகுமுந்தின பிங்களஸம்வத்ஸரத்தில் சித்திரையில் செய்ய திருவாதிரையில் ஏழ்பாருமுய்ய உதித்தருளின எதிராசருடைய பெருமைக் கடலில் ஒரு சிறு திவலையளவு இப்போது அநுபவிப்போம். “ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களினும், வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்!—ஏழ்பாருமுய்ய எதிராசருதித்தருளும், சித்திரையில் செய்ய திருவாதிரை” என்ற மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தியை முந்துற அநுஸந்தித்து. சித்திரையில் திருவாதிரையைச் சிறிது சிந்தனை செய்வோம். இந்த நன்னாளின் சிறப்பை நம் மணவாள மாமுனிகள் தாமே ஒரு சீரிய செய்யுளினால் ஆர்த்திப் பிரபந்தத்தில் வெளியிட்டருளியுள்ளார். அச்செய்யுள் எங்கும் நித்யாநுஸந்தானத்திலுள்ளது. அதாவது,

*“சங்கரபாக்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம்*
*சாய்வுற வாதியர் மாய்குவரென்றுசதுமறை வாழ்ந்திடுநாள்*
*வெங்கலி யிங்கினி வீறுநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்*
*மேதினி நஞ்சுமை யாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்*
*மங்கையராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்*
*மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்*
*செங்கயல் வாவிகள் சூழ்வயல்நாளுஞ்சிறந்த பெரும்பூதூர்ச்*
*சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரை நாளே”*

இப்பாசுரத்தின் தாற்பரியத்தைச் சுருங்கவுரைப்போமிங்கு. எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே பலபல மாய மதத்தவர்கள் இவ்வுலகில் மலிந்து வேதங்களுக்கு ஏலாத பொருள்களை ஏறிட்டுரைத்துத் தத்துவார்த்தங்களை க்ஷோபப்படுத்தியிருந்தார்கள். அதனால் வேதங்களும் “நமது கதி இப்படியாயிற்றே!” என்று சாலவும் வருந்திக் கிடந்தன. எம்பெருமானார் திருவவதரித்தவன்றே அவற்றின் வருத்தம் தொலைந்து அவை வாழ்ச்சிபெறத் தொடங்கிவிட்டன. “நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது” என்றார் அமுதனாரும்.

அன்றியும், இந்நிலவுலகில் கலிபுருஷன் நெடுநாளாகச் செங்கோல் செலுத்திக்கொண்டு தனது பராக்ரமமே ஓங்கி வளருமாறு அரசாட்சி புரிந்து வந்தான்; அன்னவனும் எம்பெருமானார் திருவவதரித்தவனறே “கலியுங்கெடுங் கண்டுகொண்மின்!” என்ற மூதுவர் மெய்ம்மொழி பலிக்குங்காலம் வாய்த்தது போலுமென்று துணிந்து இனி நாம் மாள்வதன்றி வாழ்வதற்கில்லையென்று தளர்ச்சி யெய்தத் தொடங்கிவிட்டான், “இராமானுசனித்தலத் துதித்து—இறந்தது வெங்கலி” என்றார் அமுதனாரும்.

அன்றியும், பூமிப்பிராட்டியானவள் 'ஸர்வம்ஸஹா' என்று பெயர் பெற்றிருந்தாலும் நல்லார்கள் பலபல கோடிக்கணக்காகத் தன்மீது வாழப் பெற்றாலும் அவர்களைப் பஞ்சுச் சுருள்போல் சிறிதும் ஆயாஸமின்றித் தாங்கி நின்று, தீயவர் ஒருவரிருவர் இருப்பினும் இரும்பு மூட்டை தாங்குவதனுல்போல் மிகமெலிந்து நிற்பள். உடையவர் திருவவதாரத்திற்கு முன்னே நல்லவர்கள் மிக மெலிந்து தீயவர்களே மிக மலிந்திருக்கப் பெற்றதனுல் பூமிப்பிராட்டி பொறுக்கொணுச் சுமையினுல் மிகவும் துயருற்றுக்கிடந்தாள். அன்னவள் எம்பெருமானுர் திருவவதரித்த வன்றே, 'இனி இந்நிலவுலகில் தீயார் ஒருவருமின்றிக்கே அனைவரும் நல்லாராகவே வாழ்ச்சி பெறுவர்கள்' என்று சிக்கனத் துணிந்து இனி நமக்குப் பொறுக்க வொண்ணுத பாரம் சிறிதுமிராதென்று தேறித் துயர்விடத் தொடங்கினள். "பல்கலையோர் தாம் மன்னவந்த இராமானுசன்" என்றார் அமுதனுரும்.

அன்றியும், பல ஆழ்வார்களும் ஆசாரியர்களும் திருவவதரித்து அருமருந்தன்ன ஸ்ரீஸூக்திகளை உதவியருளியிருந்தாலும், அவற்றுக்கு ஸர்வதோமுகமான ப்ரசாரம் ஏற்படாமலும் அழகிய வியாக்கியானங்கள் அமையாமலுமிருந்ததனுல் 'நம்முடைய அரிய பெரிய காரியங்கள் உலகுக்குப் பெரிதும் பயன்படவில்லையே" என்று அவர்களெல்லாரும் களிப்பின்றியே குன்றியிருந்தனர்; எம்பெருமானுர் திருவவதரித்தவன்றே "இனி ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்கள் ஓங்கி விளங்கப் பெறுமாதலால் நமக்கொரு குறையில்லை; நாம் செய்திருந்த காரியங்களெல்லாம் சதசாகமாகப் பணைக்கும்படியான பாக்கியம் வாய்க்க நற்சமயம் வந்துவிட்டது" என்று துணிந்து அன்னவர்கள் அளவிலா ஆனந்த மெய்தத் தொடங்கினர். "தென்குருகை வள்ளல் வாட்டமிலா வண்டமிழ்மறை வாழ்ந்தது" என்றார் அமுதனுரும்.

அன்றியும், எம்பெருமான் தான் பரமபதத்தில் பரவாஸுதேவனுக வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செலுத்தியிருக்குமிருப்பிலும், திருப்பாற்கடலில் அடியார்களின் கூக்குரல் செவிப்படுமாறு *வெள்ளைவெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக விரித்திருந்து அதைவிட்டுப் புறப்பட்டு ராவண கும்பகர்ண கம்ஸ சிசுபாலாதிகளைத் தொலைத்திட்டு உலகை வாழ்விக்க ராமகிருஷ்ணுதி விபவாவதாரங்கள் செய்தவற்றிலும், *கருதரியவுயிர்க்கு உயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையுமிருப்பிலும் த்ருப்தி பெருதே கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான திருப்பதிகளிலே பின்னுனர் வணங்குஞ் சோதியாய் ஸந்நிதி பண்ணியிருந்தும். அந்தத் திருப்பதிகளைத் திருத்திப் பணிகொள்வாரில்லாமையாலே அர்ச்சாவதாரமும் பயனற்றதாக ஆய்விட்டதே! என்று வருந்த வேண்டியிருந்தது எம்பெருமானுர் திருவவதரிப்பதற்கு முன்னே; இப்பெரியார் இவ்வுலகினிற் போந்தவன்றே "ஸர்வதேச தசாகாலேஷ்வ அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம். ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர முஜ்ஜ்வலா, திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ" என்று நீடுழியூழி நாடெங்கும் போற்றும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் அற்புதமான சீர்திருத்தங்களும் கைங்கர்ய அபிவிருத்திகளும் இனி ஒளிமல்குமென்று துணிந்து அர்ச்சாவதார எம்பெருமான்கள் குறை தீர்ந்து மகிழத்தொடங்கினர். ஆக இங்ஙனம் வேதவேதாந்தங்கள்

களிப்புறவும், கலிபுருஷன் தேய்வுறவும், மண்மாது மகிழ்வுறவும், பூருவறகள் யாவரும் பொலிவுறவும் எம்பெருமான் தானும் இன்புறவும் அமைந்த நன்னாள் சித்திரையில் செய்ய திருவாதிரை யொன்றேயாம்.

இத்திருநன்னாளிலே தோன்றிய பேராசிரியர் ஆதிசேஷனுடைய அவதாரமென்றும் பஞ்சாயுதாழ்வார்களின் ப்ராதுர்ப்பாவமென்றும் விஷ்வக்ஸேனருடைய அவதாரமென்றும் இங்ஙனம் பலவாருகப் பெரியோர் பணிப்பர். நூற்றந்தாதியில் "அடையார் கமலத்தலர் மகள் கேழ்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்க வில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலம் காப்பதற்கென்றிடையே இராமாநுசமுனியாயின விந்நிலத்தே" என்னும் பாசுரத்திலும், 'ப்ரதயங் விமதேஷு தீக்ஷ்ண பாவம் ப்ரபுரஸ்மத் பரிரக்ஷணே யதீந்த்ர:; அப்ருதக் ப்ரதிபந்ந யந்மயத்வை; வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:'என்ற யதிராஜ ஸப்ததி ஸூக்தியிலும், எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களின் அவதாரம் என்று கூறப்பட்டது. "விஷ்வக்ஸேநோ பதிபதிரபூத்" என்கிற யதிராஜ ஸப்ததிஸூக்தி யொன்றில் விஷ்வக்ஸேநாவதார மென்னும் விஷயம் கூறப்பட்டுள்ளது.

திருவனந்தாழ்வானுடைய திருவவதாரமென்னும் விஷயத்தைப் பற்பல ஆசிரியர்கள் பேசியுள்ளார்கள். அதனை சேஷாவதாரச் சிறப்புநூலில் விரிய வுரைத்தோம். அதில் கண்டுகொள்வது. எம்பெருமானாருடைய பூர்ண கடாக்ஷ பாத்ர பூதராய் அவர் திறத்துத் தேவுமற்றறியாதே ஈடுபட்டிருந்த மஹாப்ராஜ்ஞரான கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதமென்னும் மஹாகாவ்யத்தில் பதினேழாவது ஸர்க்கத்தில் ஸ்ரீராமாநுஜ வைபவம் சொல்லப்புகுந்த விடத்து "பௌஜங்கம் வபுரபஹாய சேஷபோகீ யத்ரூபம் த்ரிபுவநவந்திதம் ஜகாம" என்று பணித்திருப்பதும், உடையவருடைய அந்தரங்க சிஷ்யர்களில் ஒருவரான வடுக நம்பி பணித்த யதிராஜ வைபவ க்ரந்தத்தில் "வேதாந்தஸித்தாந்த ஸமர்த்தநாய பாஹ்யாந்தரப்ராந்த மதாபநுத்த்யை. சேஷாம்சக; கேசயஜ்வதேவ்யாம் தேஜோநிதி: கச்சிதிஹாவிராஸீத்" என்றுள்ளதும் முக்கியமாக இங்கு அநுஸந்தேயம்.

இராமாநுச நூற்றந்தாதியில் "நல்லார் பரவுமிராமானுசன்" என்ற எண்பதாம் பாசுரத்தின் வியாக்கியானத்தில்—"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத: பரம், பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத:" என்கிற ஆர்ஷவசநம் உதாஹ்ருதமாகக் காண்கிறது. இந்த ச்லோகத்தில் "கலௌ கச்சித் பவிஷ்யதி" என்கிற பாடமாகவும் கடையடி காண்கிறது. இப்பாடமே பொருத்தமான தென்பர்.

இப்பேராசிரியருடைய ப்ரபாவ விசேஷங்களைப் பார்க்குமிடத்து, நித்யமுக்தர்களனைவரும் திரண்டுவந்து திருவவதரித்தபடியோ! என்றும் சங்கிக்கலாயிருக்கும். அபரிச்சேத்ய ப்ரபாவங்கள் மிகுந்த இவ்வாசார்ய சிகாமணி தம்முடைய திருவடி ஸம்பந்தத்தினால் பின்புள்ளாரனைவர்க்கும் உஜ்ஜீவநம் தந்தருளியது போலவே தமது திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசார்யர்களுக்கும் உஜ்ஜீவநம் தந்தருளியதாக அக்காலத்திலிருந்த மஹான்கள் உபச்லோகித்துள்ளார்கள். இதைச் சிலர் அதிசயோக்தியென்று கொண்டாலும் அங்ஙனம் சிறப்பித்துக் கூறுதற்கு ஏற்ற பெருமேன்மை இப்பெரியார் பக்கல் நிரம்பியிருந்த தென்று கொள்ளத் தட்டில்லை.

எம்பெருமானுருடைய திருமேனியின் தோற்றமே அநுபவ ரஸிகர்களுக்குத் தேனும் பாலுமமுதுமாக உள்ளுந்தோறு முள்ளம் தித்திக்கும். "காணிலு முருப் பொலார்" என்னும்படி யிராநின்ற யதிகளின்படியன்றியே எம்பெருமானுருடைய பரம விலக்ஷணமான திவ்ய மங்கள விக்ரஹ ஸந்நிவேச அமைதியை "காஷாய சோபி கமநீயசிகாநிவேசம் தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம். உத்யத் திநேசநிப முல்லஸ தூர்த்வ புண்ட்ரம் ரூபம் தவாஸ்தி யதிராஜ! த்ருசோர் மமாக்ரே' என்றும், "உபவீதிநமூர்த்வ புண்ட்ரவந்தம் த்ரிஜகத் புண்யபலம் த்ரிதண்ட ஹஸ்தம், சரணுகதஸார்த்தவாஹமீடே சிகயா சேகரிணம் பதிம் யதீநாம்" என்றும் பூருவர்கள் பரமபோக்யமாகப் பேசி யநுபவித்துப் போந்தார்கள். ...

## பிங்களவத்ஸர மங்களமாலிகையில் *பூமன்னுமாது பொருந்திய மார்பன் பாசுர விவரணம்—முன்னிதழ்த் தொடர்ச்சி.

**14** பல்கலையோர் இத்யாதி—(பல்) இதைக் கலையிலும் அந்வயிக்கலாம், கலையோரிலும் அந்வயிக்கலாம். பலவகைப்பட்ட கலைகளையுங் கற்றவர்கள்—என்பது முந்தின அந்வயத்திற் பொருள்; கலைகளெல்லாங் கற்று மஹாவித்வான்களானுர் பலர்—என்பது பிந்தின அந்வயத்திற் பொருள். கூரத்தாழ்வான், முதலியாண்டான், எம்பார், அனந்தாழ்வான், திருக்குருகைப்பிரான் பிள்ளான் கிடாம்பியாச்சான் போல்வாரான எண்ணிறந்த சிஷ்யவர்க்கங்களை நினைக்கிறது. *ஏகாந்திநாம் த்வாதசபிஸ் ஸஹஸ்ரைஸ்ஸம் ஸேவிதஸ் ஸப்ததிஸப்தஸங்க்யா* என்று யதிராஜ வைபவத்தில் வடுகநம்பி பணித்தபடியே பன்னீராயிரம் ஸ்ரீவைஷ்ணவர்களும் எழுநூறு உத்தமாச்ரமிகளுமன்றோ எம்பெருமானுர் பக்கலிலே மண்டிக்கிடந்தது.

**15** இராமானுசன் சரணுரவிந்தம்—எம்பெருமானுர் திருவடியிணைகளின் பெருமையை மட்டும் நூற்றந்தாதியில் ஒரு பாட்டாலே யருளிச்செய்கிருர் அமுதனுர். அப்பாட்டு வருமாறு;—

"உதிப்பனவுத்தமர் சிந்தையுள், ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன, கொள்ளைவன் குற்றமெல்லாம்
பதித்தவென் புன்கவி பாவினம் பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதனி ராமானுசன் தன்னிணையடியே. (50)

இதன் கருத்தாவது—உலகமெங்கும் பரவின திருக்கல்யாண குணங்களையுடையவரும் யதிஸார்வபௌமருமான எம்பெருமானுருடைய திருவடியிணைகள் (எப்படிப்பட்டவை யென்றால்); உத்தமாதிகாரிகளாயிருப்பார் நிரந்தரம் சிந்திக்கும்படியாயிருப்பவை; சங்கரபாக்கரயாதவ பாட்டப்ரபாகராதிகளான புறமதத்தவர்கள் அஞ்சி நடுங்கும்படி அவர்களது தலைகள்மீதே நாவலிட்டுழிதருமவை; மஹாபாபியான என்னுடைய இளைய புன்கவிதைகளையுப் பெற்றுக் கொண்டவை. (என்னால் துதிக்கப்பட்டவை யென்றபடி.)

**16** நாம்—* நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே * என்கிற பொய்கையாழ்வாருடைய திருவந்தாதிப் பாசுரம் நினைவுக்கு வருகிறது. அந்தப் பாசுரத்தில்

அபூர்வமான கதையொன்று ஆழ்வாரால் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. பாசுரமாவது—*ஆமேயமரர்க்கறிய அது நிற்க, நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே!, பூமேய. மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன் நீண்முடியைப், பாதமத்தாலெண்ணினன் பண்பு* என்பதாம். இதிலுள்ள அபூர்வ கதையாவது—முன்பு இராவணன் தனது பத்துத் தலைகளையும் மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ்சென்று வரம் வேண்டிக்கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறுகுழந்தை வடிவாய் அப்பிரமனுடைய மடியில் உறங்குவான் போற்கிடந்து 'இவன் பத்துத்தலைகளை யுடையனான இராவணன்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக்கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந் தீங்காக முடியும் என்று தெரிவிப்பவன்போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத் தலைகளையும் எண்ணிக் காட்டினன்—என்பதாம். இக்கதை மூன்றாந் திருவந்தாதியில் *ஆய்ந்த வருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில், வாய்ந்த குழவியாய் வாளரக்கன் — ஏய்ந்த, முடிப்போது மூன்றேழென்றெண்ணினான், ஆர்ந்தவடிப்போது நங்கட்கரண்* என்ற (77) பாட்டிலும், நான்முகன் திருவந்தாதியில்—*கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய், தண்டவரக்கன் தலைதாளால்—பண்டெண்ணிப்—போங்குமரன்...* என்ற (44) பாட்டிலும் பேயாழ்வாராலும் திருமழிசைப்பிரானாலும் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. இக்கதை இதிஹாஸ புராணங்களில் உள்ளவிடம் தெரியவில்லை. பெரியாழ்வார் திருமொழியில் 'சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாயி* என்றும், *எல்லியம்போதினி திருத்தலிருந்த தோரிடவகையில், மல்லிகை மாமாலை கொண்டு அங்கார்த்தது மோரடையாளம்' என்றருளிச்செய்த கதைகள் வ்யாஸபராசர வால்மீகி ப்ரப்ருதிகளால் ஸாக்ஷாத்கரிக்கப்படாமல் ஆழ்வாரால் மட்டும் பகவந் நிர்ஹேதுக கருணையடியாக ஸாக்ஷாத்கரிக்கப்பட்டனவென்று நம் பூருவாசாரியர்கள் நிர்வஹித்திருப்பது போலவே இக்கதையும் கொள்ளத்தக்கதென்று பெரியோர் பணிப்பர்.

**17** மன்னி—*மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்* என்கிற திருப்பாவைப்பாசுரம் நினைவுக்குவருகின்றது. திருப்பாவை முப்பதுபாட்டுப் திருப்பாவை ஜீயரான எம்பெருமானாருடைய வைபவத்தைத் தெரிவிப்பனவாயினும் இப்பாசுரம் விசேஷித்து எம்பெருமானார் பெருமையைப் பேசுவதாம். திருப்பாவை நறுமணமென்னும் நமது விசேஷவுரையிற் காண்க.

**18** வாழ—வாழ்வது பலவிதம். *நலமந்தமில்லதோர் நாட்டில்வாழ்வதும் நரகபர்யாயமான சுவர்க்கத்தில் வாழ்வதும் வாழ்ச்சியன்று. ஆழ்வார்திருவாய்மொழியில் *வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழவே* என்றும் *இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே* என்றும் பயனுரைத்தருளினபடி இவ்விபூதியிலே அகமகிழுந் தொண்டரோடு திவ்யதேசாநுபவம் பண்ணிக்கொண்டு வாழ்வதே வாழ்வாம்.

**19** நெஞ்சே! சொல்லுவோம் — நெஞ்சின் காரியம் நினைப்பதே யொழியச் சொல்லுகையன்றே; நெஞ்சே! நினைப்போம்' என்ன வேண்டியிருக்க, நெஞ்சே சொல்லுவோமென்றது மநஸ்ஸஹகாரமின்றி எதுவும் நடைபெறாதாதலால்.

*மந:பூர்வோ வாகுத்தர:* என்றது வேதமும்.

**20** அவன் நாமங்களே—எம்பெருமான் திருநாமங்களைச் சொல்லுவதிற் காட்டிலும் எம்பெருமானார் திருநாமங்களைச் சொல்லுகையே சிறக்குமென்க. 'மதுரகவி சொற்படியே நிலையாகப்பெற்றோம்* என்றார் மணவாளமாமுனிகளும். *

# வியப்பும் - சிரிப்பும்

நாம் பதிப்பித்திருக்கும் ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையைத் தென்னாட்டிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவரும் பெரும்பாலும் ஸேவித்திருப்பர்கள். நேற்றை வைகாசித் திருநாளில் இவ்விடம் வந்திருந்த ஒரு ஸம்ப்ரதாய வித்வான் அந்த ஸ்ரீகோசத்தை (விலை கொடுத்து) வாங்கிக்கொண்டுபோய் அதில் சில பாகங்களை ஸேவித்துவிட்டு நமக்கொரு கடிதமெழுதியுள்ளார். அவருடைய திருநாமத்தை இங்கு நாம் வெளியிட விரும்புகின்றிலோம். விஷயத்தைமட்டும் விளக்க விரும்புகிறோம். இந்த விளக்கம் லோகோபகாரகமாகுமென்கிற நம்பிக்கையுள்ளது.

முமுக்ஷுப்படி முதலான நான்கு ரஹஸ்யங்களின் மூலத்திலும் வியாக்கியானத்திலும் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள ஆசாரியர்களின் திருநாமங்களை அடியேன் முகவுரையில் (பக்கம் 4ல்) ஆளவந்தார் தொடங்கி வாதிகேஸரி ஜீயரளவாக விளக்கியிருக்கிறேன். அந்தத் திருநாமச்ரேணியில் உடையவர்காலத்து உய்யக்கொண்டாரை (9, லக்கத்தில்) குறிப்பிட்டிருக்கிறேன். விவரணத்தில் முமுக்ஷுப்படி முடிவில்-உய்யக்கொண்டாருக்கு உடையவரருளிச் செய்ததாக ஓரிடமும், ஸ்ரீவசநபூஷணத்தில் (3ல்) அவருடைய வசனோதாஹரணம் ஓரிடமும் ஆக இரண்டிடமே காட்டியுள்ளேன். ப்ரக்ருதம் அடியேனுக்குக் கடிதமெழுதினவராக நிர்தேசிக்கப்பட்டவர் உய்யக்கொண்டாரைப்பற்றி மூன்றாவதாக ஓரிடமிருப்பதாகவும் அதை அடியேன் விட்டுவிட்டதாகவுங் காட்டி யுள்ளார். அதாவது, ஆசார்ய ஹ்ருதயம் மூன்றாம் பிரகரணத்தில் (சூர்ணை. 205.) "க்க்யாதிலாபபூஜாபேக்ஷையற மலர்நாடி யாட்செய்ய உய்யக்கொண்டாரைக் கொண்டு வாளும் வில்லுங்கொண்டென்கிற இழவுகள் தீரப்பெற்றது" என்றுள்ளவிடத்தை யெடுத்தெழுதி "இங்கு உய்யக்கொண்டாரை ஸ்பஷ்டமாக நிர்தேசித்திருக்கிறதே; இதைக் குறிப்பிடாமல் விட்டிட்ட காரணம் தெரியவில்லை; இவர் உடையவர்காலத்து உய்யக்கொண்டாரா? அல்லது நாதமுனிகளின் சிஷ்யரான உய்யக்கொண்டாரா? என்பதையும் விளக்கவில்லை. வியாக்கியானத்திலும் இது விளங்கவில்லை; ஸ்ரீராமாநுஜன் மூலமாகவாவது இதை விளக்கினால் மஹோபகாரமாகும்" என்றெழுதியிருக்கின்றார். இவர்க்கு ஆசார்யஹ்ருதயமூலம் கண்டபாடமென்று தெரியவருகிறது. ஆனால் இதற்குமேல் என்ன எழுதுவேன். "உழைக்கன்றேபோல நோக்கமுடையவர் வலையுள்பட்டு" என்கிற திருமாலைப்பாசுரத்தில் உடையவருடைய ப்ரஸ்தாவமுள்ளதென்றும், "இணங்குதிருச்சக்கரத் தெம்பெருமானார்க்கிடம்" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தில் எம்பெருமானாருடைய ப்ரஸ்தாவமுள்ளதென்றும் சொல்லுமவர்களையே இங்கு நாம் நினைக்கவேண்டியதாகிறது. மேலே யெடுத்த ஆசார்யஹ்ருதய

சூர்ணையில் உய்யக்கொண்டார் விவக்ஷிதரல்லர். "உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு வாளும் வில்லுங்கொண்டு என்கிற இழவுகள் தீரப்பெற்றது" என்று பிரித்து அநுஸந்திப்பர் பெரியோர். "உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு" என்பவற்றைச் சந்தி செய்து 'உய்யக்கொண்டாரைக் கொண்டு, என்று சந்தை சொல்லிச் சிந்தனை செய்ததனால்வந்த விபரீதவுணர்ச்சியிது. ஆழ்வார் தம்முடைய உபதேசத்தினால் மூன்று இழவுகள் தீரப்பெற்றாரென்று இங்கு அற்புதமாக அருளிச்செய்யப்படும் விஷயம். (1) "திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்து வைம்மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்தில் ஸம்ஸாரிகள் உஜ்ஜீவிக்கப் பெறவில்லையே யென்கிற இழவு ஆழ்வார்க்கு இருந்ததாகத் தெரியவருகின்றது. "இழந்த வெம்மாமைத் திறத்துப்போன என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார். உழந்தினி ஆரைக்கொண்டு என்னுசாகோ?" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து, தமக்கு உசாத்துணையாவாரில்லாமையினாலாகிய இழவு தெரியவருகின்றது. "ஆளுமாளார் ஆழியுஞ் சங்குஞ் சுமப்பார்தாம், வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து எம்பெருமானுடைய ஸௌகுமார்யமறிந்து பரிகைக்கு ஒருவருமில்லையே யென்கிற இழவு இருந்தமை தெரியவருகின்றது. இம்மூன்றிழவுகளையும் முறையே தெரிவிக்கிற சந்தைகள் [உய்யக்கொண்டு—ஆரைக்கொண்டு–வாளும் வில்லுங்கொண்டு] என்கிறவிவை. இவ்விழவுகள் ஆழ்வாருடைய உபதேசத்தினால் தீரப்பெற்றன. (அதாவது) ஆழ்வாருடைய உபதேசத்தின் பலனாக ஸம்ஸாரிகளெல்லாரு முஜ்ஜீவித்து, தமக்கு உசாத்துணைவரும் கிடைத்து, எம்பெருமானுக்கு மங்களாசாஸன பரர்களும் வாய்த்தனர் என்கை. ஆக இவ்விடத்தில், உய்யக்கொண்டார் ப்ரஸ்தாவம் ஸர்வாத்மநா அப்ரஸக்தமென்று தெளிவிக்கப்பட்டதாயிற்று. ... ...

## இராமானுச நூற்றந்தாதி

நிகழும் நள வருஷத்திற்கு அடுத்ததான பிங்கள வருஷத்தின் விசேஷத்தை நாம் அடிக்கடி நினைவூட்டவேண்டுமோ? ஆங்காங்குத் திருவாதிரைதோறும் ஞாயிற்றுக்கிழமைதோறும் எம்பெருமானார் பெருமைகளைப் பற்றிப் பிரவசனங்கள் நடத்திவருவதாகப் பலர் தெரிவித்துவருவதைப் பார்த்து மிகமிக மகிழ்ந்துவருகிறோம். திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த இராமானுச நூற்றந்தாதி உரையுடன் தேவையென்று பலர் எழுதிவருகிறார்கள். அந்த நூற்றந்தாதி நமது திவ்யார்த்ததீபிகை யுரையுடன் ஐந்துபதிப்பாகியும் இப்போது கிடைப்பதரிதாய் விட்டது. பலருடைய வேண்டுகோளுக்கிணங்கி இப்போது அதனை மீண்டும் பதிப்பிக்கத் தொடங்கியிருக்கிறோம். ஸ்ரீராமாநுஜன் ஒவ்வோரிதழிலும் ஒவ்வொரு பாரம் [எட்டு பக்கங்கள் வீதம்] சேர்க்கத் தொடங்கி இவ்விதழில் முதல்பாரம் சேர்த்திருக்கிறோம். இது விரைவில் முடிவுபெறும்படி பார்ப்போம். ...

க்வாளியர் நகரில் வாழும் ஸ்ரீமதுபயவே. S. ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமிகள் எழுதிய ஆங்கிலக் கட்டுரையொன்று இதில் வெளிவரத் தொடங்கியுள்ளது. இதுவும் மேன்மேலும் வெளிவரும். ஆங்கிலபாஷை யறிந்தவர்களுக்கு மட்டுமே இது கிடைக்கும். ... ... ... ...

ஸ்ரீ

எம்பெருமானார் திருவடிகளே சரணம்

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்

# இராமாநுச நூற்றந்தாதி

நூறு வெண்பாவினாலேனும் நூறு கட்டளைக் கலித்துறையினாலேனும் அந்தாதித் தொடையாற் கூறுவது நூற்றந்தாதியாம். இத்திவ்யப்பிரபந்தம் நூறு பாசுரங்களுக்குமேல் அதிகமாக எட்டுப் பாசுரங்கள் கொண்டதாயினும் நூற்றந்தாதி யென்னத் தட்டில்லை; நூறு ஆயிரம் முதலிய பெரிய எண்களுக்குப் பத்தெட்டு குறையினும் மேற்படினும் அவை நூறு ஆயிரம் என்னத் தகுந்தவையேயாம்.

இப்பிரபந்தத்தில் நூற்றெட்டுப் பாசுரங்கள் அமைந்ததற்கும், பாட்டுத்தோறும் இராமானுசத் திருநாமம் தட்டாமல் அநுஸந்திக்கப்பட்டிருப்பதற்கும் பெரியோர் ஒரு காரணங் கூறுவர்,—எம்பெருமானார் திருவடிகளில் மிக்க அன்பு பூண்டவர்கட்கு இப்பிரபந்தம் ஸாவித்ரிபோலே நித்யாநுஸந்தேயமாகவேணுமென்று பாட்டுத்தோறும் திருநாமத்தைவைத்து நூற்றெட்டுப் பாட்டாக அருளிச்செய்தாரென்று. **ப்ரபன்ன ஸாவித்ரி** என்றும் **ப்ரபன்ன காயத்ரி** என்றும் இதனை நம்மவர் கூறிப்போருவர்கள்.

**இப்பிரபந்தம்** எம்பெருமானார் காலத்திலே அவதரித்ததாயினும், பெரிய பெருமாள் அமுதனார்க்கு அருளப்பாடிட்டு எம்பெருமானாரால் திருச்செவி சாத்தப்பட்டதாதலால் இது ஆழ்வார்களருளிச் செயல்களோடு சேர்த்து அநுஸந்திக்கலாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பின் ஆழ்வார்களது திவ்ய ப்ரபந்தங்கட்கு ஏற்பட்டுள்ள அநத்யயநம் இதற்கும் ஒக்கும்.

முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என்ற நான்கு ஆயிரங்களுள் இயற்பாவில் சரமப் பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கும் இந்த நூற்றந்தாதி. பிரணவார்த்தமான முதலாயிரத்தோடு நம்மாழ்வார் விஷயமான பாகவதசேஷத்வத்தை ப்ரதிபாதிக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்பைச் சேர்த்தாற்போல, கைங்கரியத்தில் களையறுப்பதான இயற்பாவுடனே இதனைச் சேர்த்து அநுஸந்திக்கை பொருத்தமுடைத்தேயாம்.

**( திருவரங்கத்தமுதனார் வரலாறு )**

இவ்வமுதனார், ஒரு பங்குனித் திங்களில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் மூங்கிற்குடியில் திருவவதரித்து, திருவரங்கம் பெரிய கோயிலில் இருந்ததுவே காரணமாகப் **பெரிய கோயில் நம்பி** என்று பிரஸித்தராய் வாழ்ந்து வந்தார்.

[அஷ்டப்ரபந்தம் செய்தருளினவரும் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவருமான "பிள்ளைப்பெருமாளையங்கார்" என்பவர்க்கு இவர் திருத்தகப்பனார் என்று சிலரும், பாட்டனார் என்று சிலரும் சொல்லுவர்.].

இவர் ஸகல சாஸ்த்ரங்களையும் அதிகரித்து மஹா நிபுணராய், தமக்குக் குல க்ரமமாகக் கிடைத்த ஸந்நிதி புரோஹித வ்ருத்தியையும் புராணபடந கைங்கர்யத்தையும் பெற்று மிகவும் ராஜஸராய்ச் செருக்குடன் வாழ்ந்துவரும் நாளிலே,

உலகங்களை வாழ்விக்கத் திருவனந்தாழ்வானது திருவவதாரமாய்த் திருவவதரித்த எம்பெருமானார் தமது இயற்கையின்னருளாலே இவரைத் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம்பற்றிக் கூரத்தாழ்வானுக்கு நியமிக்க, ஆழ்வானும் இவரை அநுவர்த்தித்து ஞானச்சுடர்கொளுத்தி எம்பெருமானார் திருவடிக்கீழ்க் கொணர்ந்து சேர்க்க எம்பெருமானாரும் அவரைக் குளிரக் கடாக்ஷித்தருளி ஆழ்வான் பக்கல் ஆச்ரயிக்கும்படி நியமிக்க, அப்படியே அவரும் ஆழ்வானை ஆச்ரயித்துத் தத்வஹித புருஷார்த்தங்களை ஐயந்திரிபறத் தெளிந்து ஆத்ம ஆத்மீயங்களை அந்த ஆசார்யன் திருவடிகளிலே ஸமர்ப்பித்துப் பரம ப்ரவணராயிருந்தார். இப்படியிருக்கையில், ஸ்வாசார்யருடைய உகப்புக்கு உறுப்பாகத் தமக்கு ப்ராசார்யரான எம்பெருமானார் விஷயமாக ஒன்றிரண்டு பிரபந்தங்களைச் செய்து அவற்றை எம்பெருமானார் ஸந்நிதியிற் கொணர்ந்து வைக்க, எம்பெருமானாரும் அவற்றை அவிழ்த்துக் கடாக்ஷிக்க, அவை தமது திருவுள்ளத்துக்கு இசைந்திராமையாலே அவற்றைக் கிழித்தெறிந்துவிட்டு அவரை நோக்கி, நம்மைப் பற்றிப் பிரபந்தம் பாட விருப்பம் உமக்கிருக்குமாகில், ஆழ்வார்களிடத்தும் உகந்தருளின நிலங்களினிடத்தும் நமது ப்ராவண்யம் தோற்றுமாறு ஒரு பிரபந்தம் செய்யும் என்று நியமித்தருள, இவரும் அப்படியே செய்கிறேனென்று அந்த நியமநத்தை சிரஸாவஹித்து எம்பெருமானார்க்கு ஆழ்வார்களிடத்திலும் திவ்ய தேசங்களிடத்திலுமுள்ள அன்பை நன்கு விளங்கவைத்து இந்தப் பிரபந்தத்தை அருளிச்செய்து எம்பெருமானார் ஸந்நிதியிலேவந்து வணங்கி 'இதைக் கேட்டருளவேணும்' என்று பிரார்த்தித்து அநுமதி பெற்றுக் கூரத்தாழ்வான் முதலானோர் பேரோலக்கமாக இருக்கிற அங்குத்தானே இந்தப் பிரபந்தத்தை விண்ணப்பம் செய்ய, எம்பெருமானார் மற்றை முதலிகளோடும் திருச்செவி சாத்தித் தலைதுலுக்கிப் போரவுகந்தருளி, தம் திருவடிகளில் ஸம்பந்தமுடையார்க்கெல்லாம் இந்தப் பிரபந்தத்தை அன்று தொடங்கி என்றும் நித்தியாநுஸந்தேயமாம்படி கற்பித்தருளியதுந் தவிர, அவரது வாக்கு அமுத வாக்காயிருந்தமையால் அவர்க்கு **அமுதன்** என்ற திருநாமத்தையும் பிரஸாதித்தருளி மிகவும் கடாக்ஷித்தருளினார். ஆகையால் அது முதல் 'பெரியகோயில் நம்பி' என்ற திருநாமம் மாறித் திருவரங்கத்தமுதனார் என்ற திருநாமம் வழங்கத் தொடங்கிற்று. இப்பிரபந்தத்திற்கு **ப்ரபன்ன காயத்ரி** என்ற திருநாமமும் அன்றே தொடங்கி நிகழலாயிற்று.

இந்த விருத்தாந்தம் சிறிது மாறுபாடாகவும் சொல்லப்படுவதுண்டு; எங்ஙனே யெனின் ;— அமுதனார் எம்பெருமானாருடைய நியமனம் பெற்று இப்பிரபந்தம் இட்டருள்வதாக அடைய வளைந்தான் திருமதிலுக்கு இவ்வருகேயிருந்த ஒரு தென்னஞ்சோலைத் திருமண்டபத்தில் வீற்றிருந்து பட்டோலை கொண்டிருக்கும் போது, அவ்வளவில் எம்பெருமானார் அழகிய மணவாளனது நியமநத்தினால் ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலிய அந்தரங்க சிஷ்யர்களோடு அவ்விடத்தே யெழுந்தருள அப்போது ''செழுந்திரைப்பாற்கடல்'' என்ற நூற்றைந்தாம் பாசுரம் தலைக்கட்டி, இருப்பிடம் வைகுந்தமென்ற பாசுரம் எழுதவேண்டிய தருணமாயிருந்ததென்றும், அது முதலான மூன்று பாசுரங்களும் எம்பெருமானார் திருமுன்பே தொடுக்கப்பட்டன வென்றும், பிறகு அரங்கேற்றி யானபின் 'இந்த விசேஷத்துக்கு ஸ்மாரகமாக இப்பிரபந்தத்திற்கு மாத்திரம் சாற்றுப் பாசுரங்கள் மூன்றாயிருக்கவேணும்' என்று ஆழ்வான் நியமித்தருளினாரென்றும், ஆனது பற்றியே மற்றைப் பிரபந்தங்கட்கு இரண்டு பாசுரம் சாற்றாயிருப்பதுபோலல்லாமல் இதற்கு மூன்று பாசுரம் சாற்றாக ஸம்ப்ரதாயம் நிகழ்கின்றதென்று உணர்க.

---

ஸ்ரீ

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதியின் தனியன்கள்

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும்—என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன் தென்புலத்தார்க்கு
என்னுக் கடவுடையேன் யான்.

| | | | |
|---|---|---|---|
| முன்னை வினை | முன்னே செய்த பாபங்களெல்லாம் | அணி ஆக | ஆபரணமாக |
| அகல | ஒழிவதற்காக, | சேர்த்தினேன் | பொருந்த வைத்துக் கொண்டேன்; |
| மூங்கில் குடி அமுதன் | 'மூங்கிற்குடி' என்னுங் குலத்திலே தோன்றிய திருவரங்கத்தமுதனாருடைய | யான் | இப்படி அமுதனாருடைய திருவடிகளைச் சூடப்பெற்ற அடியேன் |
| பொன் அம் கழல் கமலப் போது இரண்டும் | பொன்போல் அழகிய பாதாரவிந்தங்களிரண்டையும் | தென் புலத்தார்க்கு | தெற்குத் திக்கிலுள்ளாரான யமகிங்கரர்கட்கு |
| | | என்னுக்கு | ஏதுக்காக |
| என்னுடைய சென்னிக்கு | எனது தலைக்கு | கடவு உடையேன் | ப்ராப்தி யுடையேன்? |

* * *—நெடுநாளாக நான் செய்து போந்த கருமங்கள் தொலைந்து அக்கரும பலன்களின் அனுபவம் எனக்கு நேராம லிருப்பதற்கு ஒரு மஹோபாயம் கண்டறிந்து அனுட்டித்தேன்; அதாவது, மூங்கிற்குடியென்ற மஹாகுலத்திலே தோன்றிய திருவரங்கத்தமுதனாருடைய திருவடித்தாமரைகளை நான் சிரோபூஷணமாக அணிந்துகொண்டேன்; அதனால் எனது ஸகல கருமங்களும் தீயினில் தூசாகியொழிந்தன. இனி யமனுக்காவது யமபடர்களுக்காவது என்னருகே வருவதற்கு யாதொரு ப்ரஸக்தியுமில்லை: என்றாராயிற்று.

"**முன்னை வினையகலச் சேர்த்தினேன்**" என இயையும். **[மூங்கிற்குடி]** வேயர்குலம், ஆஸூரிகுலம், கூரகுலம் என்பனபோல மூங்கிற்குடி யென்று ஒரு குலமுண்டாம். **அமுதன்**—இவர்க்கு, **பெரியகோயில்நம்பி** என்பது பண்டு வழங்கி வந்த திருநாமம். இவர் இயற்றிய நூற்றந்தாதியைத் திருச்செவி சார்த்தியருளிய எம்பெருமானார் இவருடைய வாக்கு அமுதவாக்கா யிராநின்றதென்று உகந்தருளி **அமுதன்**—என்று திருநாமம் ப்ரஸாதித்தருளினராம். **கமலப்போது**—தாமரைப்பூ. **அணி**—ஆபரணம். **சேர்த்தினேன்**—சேர்த்தேன் என்றபடி; **இன்**—சாரியை.

என்னுக்கு + கடவுடையேன்—என்னுக்கடவுடையேன்; (கடைக்குறை) கெடுதல்விகாரப் புணர்ச்சி. **என்னுக்கு**—ஏதுக்காக என்கை; "என்னுக்கவளை விட்டிங்குவந்தாய்" என்றார் குலசேகரப் பெருமாளும். **[கடவுடையேன்]** கடவு—ப்ராப்தி; அதாவது-உரிமை. ... ... ... ... *

நயந்தரு பேரின்பமெல்லாம் பழுதென்று நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி யிராமானுசமுனி தாளிணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமு தோங்குமன்பால்
இயம்பும் கலித்துறையந்தாதி யோதவிசை நெஞ்சமே.

| | |
|---|---|
| நெஞ்சமே | மனமே! |
| நயம் தரு | விஷயங்களால் தரப்படுகிற |
| பேர் இன்பம் எல்லாம் | சிற்றின்பங்கள் யாவும் |
| பழுது என்று | வ்யர்த்தங்களென்று (அவற்றை விட்டொழிந்து) |
| நண்ணினர் பால் | தம்மை ஆச்ரயித்தவர்கள் விஷயத்தில் |
| சயம் தரு கீர்த்தி | ஸம்ஸார ஜயத்தைப் பண்ணிக்கொடுக்கும் புகழுடையரான |
| இராமாநுச முனி | எம்பெருமானாருடைய |
| தாள் இணை மேல் | இரண்டு திருவடிகள் விஷயமாக |
| உயர்ந்த குணத்து திரு அரங்கத்து அமுது ஓங்கும் அன்பால் | சிறந்த குணசாலியான திருவரங்கத் தமுதனார் கொழுந்து விட்டோங்கிய பக்தியினாலே |
| இயம்பும் | அருளிச்செய்த |
| கலித்துறை அந்தாதி | கட்டளைக் கலித்துறையினாலமைந்த நூற்றந்தாதியை |
| ஓத | அத்யயநம்செய்ய |
| இசை | ஸம்மதித்திருக்கக் கடவை. |

* * * விஷயாந்தரங்களின் அனுபவத்தினாலுண்டாகும் சிற்றின்பங்கள் யாவும் அற்பங்களென்றும் ஹேயங்களென்றும் கருதி அருவருத்து அவற்றில் நசையற்றுத் தம்மைவந்து அடிபணிகின்ற மஹாநுபாவர்களுக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்தருளி மோக்ஷத்தைத் தந்தருள்பவராய் இப்பெரும்புகழ் பரவப் பெற்றவரான எம்பெருமானார் விஷயமாக, பகவத்-பாகவத பக்தி முதலிய மஹா குணங்கள் நிறைந்த திருவரங்கத்தமுதனார் பரமபக்தி தலையெடுத்துச் சொன்ன நூற்றந்தாதியென்னும் திவ்ய ப்ரபந்தத்தை ஓதுவதற்கு நெஞ்சே! நீ இசைந்திடாய் என்கிறார். நல்வழி தீவழிகளிற் போதற்கு நெஞ்சே முதற்காரணமாதலால் அதனுடைய ஆநுகூல்யம் பெறுதற்குப் பாரிக்கின்றாரென்க.

**நயம்**—விஷயாந்தரங்கள். "நாணாமை நள்ளேன் **நயம்**" (முதல் திருவந்தாதி) என்றவிடத்து, **நயம்** என்பதற்கு விஷயாந்தரங்களென்று பொருள் அருளிச்செய்யப்பட்டிருத்தல் காண்க. **பேரின்பம்**—சிற்றின்பமென்னவேண்டுமிடத்துப் பேரின்பமென்றது விபரீதலக்ஷணையாம் 'நல்லபாம்பு' என்னுமாபோலே. அன்றி, பேரின்பமுண்டென்று ப்ரமித்திருப்பார் கருத்தாலே சொல்லிற்றாகவுமாம்.

"ஆயிழையார் கொங்கை தங்கும் அக்காதலளற்றழுந்தி மாயுமென்னாவியை வந்தெடுத்தானின்று" என்று இவ்வமுதனார் தாமும், [மதநகதனைர் நக்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:] என்று வேதாந்தார்யரும், [காமாதிதோஷஹரமாத்மபதாச்ரிதாநாம்] என்று பெரிய ஜீயரும் பணித்தவை இப்பாட்டின் முன்னடிகட்குச் சந்தையாக அநுஸந்தேயம்.

"...பழுதின்றி நண்ணினம்பால்" என்றும், "பழுதின்றி நண்ணிநன்பால்" என்றும் பாடபேதங்களுண்டாம். **சயம்**—ஜயம்; "நாவலிட்டுழி தருகின்றோம் நமன்றமர் தலைகள் மீதே" என்று மீசை முறுக்கிச் சொல்லப் பண்ணுகை.

**[கலித்துறையந்தாதி—]** "முதற்சீர்நான்கும் வெண்டளை பிழையாக், கடையொருசீரும் விளங்காயாகி, நேர்பதினாறே நிரைபதினேழென் றோதினர் கலித்துறை யோரடிக்கெழுத்தே" என்பது, கட்டளைக் கலித்துறை யிலக்கண முணர்த்தும் ஸூத்ரமாகும். கட்டளைக் கலித்துறையில் ஒவ்வோரடிக்கும் உரிய ஐந்துசீர்களுள் முதல் நான்கும் ஈரசைச்சீர்களும் ஐந்தாவது விளங்காய்ச் சீருமாக வெண்டளை பிறழாமல் வரும். வரவே, நேரசை முதலான அடி ஒற்றொழித்துப் பதினாறெழுத்தும், நிரையசை முதலான அடி ஒற்றொழித்துப் பதினேழெழுத்துமாகத் தானே அமையும். வெண்பாவுக்குப்போலக் கட்டளைக் கலித்துறைக்கு ஓரடியின் இறுதிச் சீரோடு அடுத்த அடியின் முதற்சீர் வெண்டளை தவறாது வரவேண்டுமென்ற நியதி இல்லை. அந்த நியதிகொள்ளின், நிரையசை முதற் கட்டளைக் கலித்துறையெல்லாம் காய்முன் நிரைவந்து கலித்தளையாய் வெண்டளைவழுவாமாறு

காண்க. கலிநிலைத்துறை, கலிவிருத்தம், ஆசிரியவிருத்தம் என்பவை முதலிய சிலவற்றிற்குப் போலக் கட்டளைக் கலித்துறைக்கு நான்கு அடிகளும் அளவொத்து வரவேண்டுமென்னும் நியதியுமில்லை. வெண்பா ஆசிரியப்பா முதலிய சிலவற்றிற்போலவே அளவொவ்வாமலே வரலாம். கட்டளைக் கலித்துறை பெரும்பாலும் ஏகாரவீற்றதும், சிறுபான்மை ஓகாரவீற்றதுமாம். இந்நூலில் எல்லாப் பாசுரங்களும் ஏகாரவீற்றனவே. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தத்தில், ''கோலப்பகல்களிறொன்றுகற்புய்ய'' என்ற நாற்பதாம் பாசுரமொன்றே ஓகார வீற்றது. ஓகாரவீறாய் வருவதற்கு வேறு மேற்கோள் கிடைப்பரிது. ஏகார வுயிரீறாகவன்றி மெய்யீறாகவந்த கட்டளைக் கலித்துறைகளும் சான்றோர் செய்யுளிற் காணப்படுகின்றன.

இத்திவ்யப்பிரபந்தம் அந்தாதித்தொடையாற் பாடப்பட்ட பிரபந்தமாதலின் சொல் தொடர்நிலை, பொருள்தொடர்நிலை யென்னும் இருவகையுள் சொல் தொடர்நிலையாம். [**அந்தாதித் தொடையாவது**—முன்னின்ற பாட்டின் இறுதி எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின்வரும் பாட்டின் முதலாகப் பாடுவது] இந்நூல் இறுதிச் செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமையும்படி மண்டலித்துப் பாடப்பட்டுள்ளமையுங் காண்க. ... ... ... *

**இதுவுமது**

**சொல்லின் தொகைகொண் டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும்**
**நல்லன்பரேத்து முன்னாமமெல்லா மென்றன் நாவினுள்ளே**
**அல்லும் பகலு மமரும்படிநல் கறுசமயம்**
**வெல்லும்பரம விராமாநுச விதென் விண்ணப்பமே.**

| | |
|---|---|
| அறு சமயம் | அப்ராமாணிகங்களான ஆறு மதங்களையும் |
| வெல்லும் | கண்டித்தருளின |
| பரம | ஆரியரான |
| இராமானுச | எம்பெருமானாரே! |
| உனது அடி போதுக்கு | தேவரீருடையபாதாரவிந்தங்களிலே |
| தொண்டு செய்யும் | வாசிக கைங்கரியம் பண்ணுகிற |
| நல் அன்பர் | பரம பக்தர்கள் |
| சொல்லின் தொகை கொண்டு | சப்த ராசிகளைக் கொண்டு |
| ஏத்தும் | துதிக்கிற |
| உன் நாமம் எல்லாம் | தேவரீருடைய திருநாமங்களெல்லாம் |
| என்தன் நாவினுள்ளே | எனது நாவிலே |
| அல்லும் பகலும் | அஹோராத்ரமும் |
| அமரும்படி | பொருந்தியிருக்கும்படி |
| நல்கு | க்ருபைசெய்தருள வேணும்; |
| இதுவே என் விண்ணப்பம் | இவ்வளவே அடியேன் செய்யும் விஜ்ஞாபனம். |

***—கூறுஞ்சமயங்களாறுங் குலையக் குவலயத்தே வந்தருளின ஸ்வாமிந்! தேவரீருடைய திருவடிவாரத்திலே சீலமில்லாச் சிறியேன் செய்யும் விண்ணப்பம் ஈதொன்றே; அது யாதெனில்; தேவரீரிடத்துப் பரமபக்தி பூண்டவர்கள் ''தங்களன்பாரத் தமது சொல்வளத்தால் தலைத்தலைச் சிறந்து பூசிப்ப'' என்ற கணக்கிலே தத்தம் சக்திக்கியன்றவாறாக சப்தராசிகளை யடுக்கி தேவரீருடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணுவர்களன்றோ; அத்திருநாமங்கள் இடைவிடாது என் நாவிலே திகழும்படி அநுக்ரஹித்தருளவேணும்; இஃதொன்றேயாய்த்து அடியேனுடைய ப்ரார்த்தனை—என்கிறார் ஒரு பக்த சிகாமணி.

**தொகை** என்பதற்கு ஸங்கியை என்று பொருள் கொள்ளுதலுமாம். எம்பெருமானார் விஷயமாக நூற்றெட்டுப் பாசுரங்கள் பாடவேணுமென்று ஒரு தொகையை நெஞ்சிலேகொண்டு நல்லன்பரான அமுதனார் அருளிச்செய்த தேவரீருடைய நாம

மாலையாகிய நூற்றந்தாதிப் பிரபந்தமானது எப்போதும் என் நாவிலே பொருந்துமாறு அருளவேணும் என்றுராகவுங்கொள்க. ''எங்கள் கதியே இராமானுச முனியே!, சங்கைகெடுத்தாண்ட தவராசா — பொங்குபுகழ், மங்கையர்கோனீந்த மறையாயிர மனைத்தும், தங்குமனம் நீயெனக்குத் தா'' என்றதுபோலவாம். ... *

[இம்மூன்று தனியன்களே ஸகல திவ்ய தேசங்களிலும் வழங்குமவை; மற்றொரு தனியன் மேனாட்டில் அநுஸந்திக்கப்படுகிறதாம்; அதாவது.]

**இனியென் குறைநமக் கெம்பெருமானார் திருநாமத்தால்**
**முனிதந்த நூற்றெட்டுச் சாவித்திரியென்னு நுண்பொருளைக்**
**கனிதந்த செஞ்சொற் கலித்துறையந்தாதி பாடித்தந்தான்**
**புனிதன் திருவரங்கத் தமுதாகிய புண்ணியனே.**

(இதன் கருத்து :—) ஸர்வேச்வரன் ஆதியிலே ஸங்கல்பபூர்வகமாக உலகத்தைப் படைத்து முதலிலே சதுர்முகப்ரஹ்மாவுக்கு ஸாவித்திரியை உபதேசித்தான். இவ்வமுதனார் அந்த ஸாவித்ரியின் ஸாரார்த்தத்தை யெடுத்து **இராமானுசன்** என்னுந் திருநாமத்தோடிணக்கிக் கட்டளைக் கலித்துறையிலே வைத்துத் தாம் அநுபவித்த அநுபவத்தின் பரீவாஹரூபமாக இந்நூற்றந்தாதியைப் பாடிப் பின்புள்ளாரான நமக்கும் உபகரித்தருளினார். இனி நமக்கு ஐஹிகாமுஷ்மிகங்களில் ஒரு குறையுமில்லை என்பதாம். இச்செய்யுளின் முதலடியின் முடிவில் ''திருநாமத்தால்'' என்றவிடத்து, **திருப்பெயரால்** என்று பாடமிருப்பின் வெண்டளைக்குச் சேரும்.

**தனியன் உரை முற்றிற்று.**

---

ஸ்ரீ:

# இராமாநுச நூற்றந்தாதி

## உரையின் அவதாரிகை

---

ஸகல சாஸ்த்ரங்களுக்கும் ஸங்க்ரஹம் திருவஷ்டாக்ஷரம் அதனுடைய பரம தாத்பர்யமாயும், ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களின் ஸாரார்த்தமாயும், ஸ்ரீமதுரகவிகளுடைய உக்தியாலும் அநுஷ்டாநத்தாலும் ப்ரகாசிதமாயும், நம் பூருவாசார்யர்களின் உபதேச பரம்பரையாலே ப்ராப்தமாயும், சேதநர்களனைவர்க்கும் இன்றியமையாத ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களின் நிஷ்க்ருஷ்ட வேஷமாயும், பரம ரஹஸ்யார்த்தமாயு மிருப்பது சரமபர்வ நிஷ்டை. அஃதிருக்கும்படியைத் திருவரங்கத்தமுதனார்க்கு எம்பெருமானார் தமது நிர்ஹேதுக க்ருபையினாலே கூரத்தாழ்வான் திருவடிகளிலே இவரை ஆச்ரயிப்பித்தருளி அவர் முகமாக உபதேசித்தருளினார். அங்ஙனம் உபதேச ப்ராப்தமான அந்தச் சீரிய பொருளை இவ்வமுதனார் தாம் அநவரத பாவநை பண்ணி எம்பெருமானார் திருவடிகளை இடைவிடாது ஸேவித்துக்கொண்டு போந்தாராய் அவருடைய திருக்கல்யாண குணங்களைத் தமது பக்திப் பெருங்காதலுக்குப் போக்குவீடாகப் பேசி அநுபவித்தே தீரவேண்டும்படியான நிலைமை தமக்கு உண்டானமையாலும், சரமபர்வ நிஷ்டையே சீரியதென்கிற பரமார்த்தத்தைச் சேதநர்கட்கு எளிதில் உணர்த்த வேணுமென்கிற க்ருபாமூலகமான கருத்தினாலும் தாம் எம்பெருமானாருடைய திவ்ய குண சேஷ்டிதாதிகளை ப்ரேமத்துக்குத் தகுதியாகப் பேசுகிற பாசுரங்களாலே அவருடைய வைபவங்களை அனைவர்க்கும் வெளியிடா நின்றுகொண்டு முன்பு ஆழ்வார் திருவடிகளுக்கே அற்றுத்தீர்ந்த மதுரகவிகள் தமது நிஷ்டையைக் கூறும்

முகத்தாலும் பிறர்க்கு உபதேசிக்கும் முகத்தாலும் உஜ்ஜீவநத்துக்கு உபயுக்தமான அர்த்தத்தை லோகத்திலே வெளியிட்டருளினதுபோல, இவர் தாமும் அவ்வகைகளாலே ஆசார்யாபிமாநநிஷ்டர்க்கு அறிந்துகொள்ளத் தக்க அர்த்தங்களையெல்லாம் மிக்க சுருக்கமும் மிக்க விரிவுமின்றி நூற்றெட்டுப் பாசுரங்கள்கொண்ட இத்திவ்ய ப்ரபந்த முகத்தால் அருளிச்செய்கிறார். ... ... ... *

**பூமன்னுமாது பொருந்திய மார்பன்* புகழ்மலிந்த**
**பாமன்னுமாற னடிபணிந் துய்ந்தவன்* பல்கலையோர்**
**தாம்மன்ன வந்த விராமானுசன் சரணாரவிந்தம்**
**நாம்மன்னிவாழ* நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே.** 1

| | |
|---|---|
| நெஞ்சே! | ஓ மனமே! |
| பூ மன்னு மாது | தாமரைப்பூவில் பொருந்த முடையவளாயிருந்த பிராட்டி |
| பொருந்திய மார்பன் | அப்பூவை விட்டு வந்து பொருந்துகைக் குறுப்பான போக்யதையை யுடைய திருமார்பை யுடையனான பெருமானுடைய |
| புகழ் மலிந்த பா | திருக்கல்யாண குணங்கள் நிறைந்த தமிழ் பாசுரங்களிலே |
| மன்னு மாறன் | ஊற்றமுடையவரான நம்மாழ்வாருடைய |
| அடி பணிந்து | திருவடிகளை ஆச்ரயித்து |
| உய்ந்தவன் | உஜ்ஜீவித்தவரும் |
| பல் கலையோர் தாம் மன்ன வந்த | பலபல சாஸ்த்ரங்களை ஓதின மஹான்கள் நிலைபெறும்படி (இவ்வுலகில்) வந்தவதரித்தவருமான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| சரண அரவிந்தம் | திருவடித் தாமரைகளை |
| நாம் மன்னி வாழ | நாம் ஆச்ரயித்து வாழ்வதற்குறுப்பாக |
| அவன் நாமங்களே | அவ்வெம்பெருமானாரது திரு நாமங்களையே |
| சொல்லுவோம் | ஸங்கீர்த்தநம் பண்ணுவோம் |

* * *—தாமரைமலரிற் பிறந்த பெரிய பிராட்டியார் அப்பூவைவிட்டு ''அகலகில்லேன் இறையும்'' என்று வந்து மிக்க விருப்பத்துடன் வஸிக்கப்பெற்ற திருமார்பை யுடையனான திருமாலினது திவ்ய குணசேஷ்டிதங்களை நிறைத்துக் கொண்டிருக்கிற திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களை அருளிச்செய்த நம்மாழ்வாருடைய திருவடிகளைத் தொழுது ஸத்தை பெற்றவராயும், பலபல சாஸ்த்ரங்களைக் கற்றும் உஜ்ஜீவநோபாயத்தில் த்ருடாத்யவஸாயமின்றியே ஸம்சய விபர்யயங்கள்கொண்டு தடுமாறுகின்றவர்களை ஒரு நிச்சயஜ்ஞானத்திலே நிலை நிறுத்தி வாழ்விக்கவந் தவதரித்தவராயுமிருக்கிற எம்பெருமானாருடைய திருவடிகளை நாம் ஆச்ரயித்து உஜ்ஜீவிக்குமாறு அவருடைய திருநாமங்களை வாயாரப் பேசுவோமென்று தமது திருவுள்ளத்தை நோக்கிச் சொல்லுகிறாராயிற்று.

எல்லா நூல்களும் மங்கலமொழி முதல் வகுத்துக் கூறவேண்டுவது மரபாதலால், பூ என்று தொடங்கினார். இச்சொல், திருச்சந்தவிருத்தத்தொடக்கத்தில் சப்த சக்தியால் மாத்திரம் மங்கலமொழியாய் நின்றது; இங்கு அர்த்த சக்தியாலும் நின்றது என்ற விசேஷம் அறியத்தக்கது. (அங்கே, பூ—பூமி.)

எம்பெருமானார்க்கு அதிசயாவஹமான வைபவங்கள் பல்லாயிரமிருந்தாலும், ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யத்தையே அவர் தமக்குப் பெரிய வைபவமாக அத்யவஸித்திருந்தாராதலால் அவருடைய அத்யவஸாயத்துக்குப் பொருந்த **''மாறனடி பணிந்துய்ந்தவன்''** என்ற விசேஷணம் முற்பட்டது. இதனை யடியொற்றியே மணவாளமாமுனிகளும் [ஸ்ரீமாத வாங்க்ரிஜலஜத்வய நித்ய ஸேவாப்ரேமாவிலாசய பராங்குச பாத பக்தம்] என்று தொடங்கினார்.

**பாமன்னுமாறன்**—ஆழ்வார் தாமருளிச்செய்த பாசுரங்களின் இனிமையைக் கண்டு தாம் அவற்றில் மிக்க ஊற்றமுடையவரா யிருந்தாரென்கிறது. ''தன்சீர் யான்கற்று மொழிபட்டோடுங் கவியமுத நுகர்ச்சியுறுமோ முழுதுமே'' என்றும், ''தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்'' என்றும், ''கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே'' என்றும் தாமே அருளிச் செய்தாரிறே. **மாறன்**—ஆழ்வார் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால் குடித்தல் முதலிய லோகவியாபாரம் ஒன்றுமின்றி உலகநடைக்கு மாருக இருந்ததனால், இவர்க்கு 'மாறன்' என்ற திருநாமமாயிற்று; வலிய வினைகட்கு மாருக இருத்தலாலும், அந்ய மதஸ்தர்களை யடக்கி-அவர்கட்கு சத்ருவாயிருத்த லாலும், பாண்டிய நாட்டில் தலைமையாகத் தோன்றியதனாலும் வந்தபெய ரென்றலுமுண்டு.

**பல்கலையோர் தாம்மன்ன**—நாநா சாஸ்த்ரங்களைக்கற்று வல்லவர்களான ஆழ் வான் ஆண்டான் எம்பார் முதலிய மஹான்கள் ப்ரதிஷ்டிதராகைக்காக என்று மாம். எம்பெருமானாருடைய சரணாரவிந்த ப்ராப்திக்கு ஸாதநம்—அவருடைய திரு நாமஸங்கீர்த்தநமேயாம் என்பது இப்பாசுரத்தில் வெளியாயிற்று. ... *

**கள்ளார்பொழில் தென்னரங்கன்* கமலப்பதங்கள் நெஞ்சில்**
**கொள்ளாமனிசரை நீங்கி* குறையல் பிரானடிக்கீழ்**
**விள்ளாதவன்ப விராமாநுசன் மிக்க சீலமல்லால்**
**உள்ளாதென்னெஞ்சு* ஒன்றறியே னெனக்குற்ற பேரியல்வே.** 2

| | | | |
|---|---|---|---|
| கள் ஆர் பொழில் தென் அரங்கன் | தேன் நிறைந்த சோலைகளையுடைய தென் திருவரங்கத்திலே பள்ளிகொள்ளும் பெருமானுடைய | இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| கமலம் பதங்கள் | தாமரை போன்ற திருவடிகளை | மிக்க சீலம் அல்லால் | சிறந்த சீல குணத்தைத் தவிர |
| நெஞ்சில் கொள்ளா | தமது நெஞ்சிலே வையாத | ஒன்று | வேறொன்றையும் |
| மனிசரை நீங்கி | மனிதர்களை விட்டொழிந்து | என் நெஞ்சு உள்ளாது | எனது நெஞ்சானது நினைக்க மாட்டாது; |
| | | | (இவ்வாருக) |
| குறையல் பிரான் அடி கீழ் விள்ளாத அன்பன் | திருமங்கை மன்னனுடைய திருவடிகளிலே என்றும் விட்டு நீங்காத பக்தியையுடையரான | எனக்கு உற்ற பேர் இயல்வு | எனக்கு ஸித்தித்ததொரு சிறந்த ஸ்வபாவத்திற்கு |
| | | ஒன்று அறியேன் | ஒரு காரணத்தையும் அறிகின்றிலேன். |

***—''நெஞ்சே! சொல்லுவோமவன் நாமங்களே'' என்றவுடனே எனது ஹ்ருதயமானது அவ்விராமாநுசனுடைய சீலத்தில் ஊன்றப்பெற்ற ஆச்சரி யத்தை என்ன சொல்லுவேன்! என்று விஸ்மயப்படுகிருர். ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளை நெஞ்சாலும் நினையாத பாவிகளோடு நெடுங்காலம் பழகிக் கிடந்த என் நெஞ்சானது இன்று அப்பாவிகளோடு உறவை ஒழித்துவிட்டு, திரு மங்கையாழ்வாருடைய திருவடிகளையே அநவரதம் இறைஞ்சுமவரான எம்பெருமா னாருடைய சிறந்த சீலகுண மொன்றையே சிந்தியாநின்றது; இப்படிப்பட்டதொரு பெருந்தன்மை எனக்கு நேர்ந்ததற்குக் காரணம் அவ்வெம்பெருமானாருடைய நிர்ஹேதுக க்ருபாகடாக்ஷமேயொழிய வேறொன்றுண்டாக நானறிகின்றிலேன் என்றவாறு.

உடையவர்க்கு நம்மாழ்வார் திருவடிகளில் பக்தியுள்ளபடியை முதற்பாட்டில் பேசினர்; ''மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற அவதரித்த'' என்றபடி அவ்வாழ்வாருடைய தமிழ் வேதத்திற்கு அங்கமாக ஆறு

சிரமேற்கொண்டு ஸ்ரீஸ்வாமியின் நிழலிலேயே ஒதுங்கி வர்த்தித்து வந்தேன். ஸ்ரீஸ்வாமி ஒரு க்ஷணகாலமும் அசலாமலும் பிறரோடு பேசாமலும் ஓரெழுத்துத் தப்பாமலும் கம்பீரத்வனியோடு இயல்ஸேவித்தழகை முதன்முதலாக அங்கு அநுபவிக்கப் பெற்றேன். அது முதலாக அடியேன் ஸ்ரீஸ்வாமியோடு அடிக்கடி நெருங்கி வார்த்தையாடும் பாக்கியம் பெற்றேன்.

அடுத்த ஸந்தர்ப்பம் விஜ்ஞாபிக்கக் கேளீர்; பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு திருநாராயணபுரம் வைரமுடியுத்ஸவம் ஸேவிக்க அங்கு விடைகொண்டிருந்தேன். அவ்விடத்தில் தினப்படியாக யாகசாலையில் திருவாய்மொழி ஸேவை நடைபெறுவது வழக்கம். ஸ்ரீஸ்வாமி தமது திருத்தம்பியாருடன் ஸேவித்துக் கொண்டிருக்கிறார். ஸமாப்தி ஸமயத்தில் அடியேன் அங்கு விடைகொண்டேன்; பரமகம்பீரமான திருமிடற்றோசையைப் பத்தெட்டு நிமிஷம் கேட்டு உள்ளமுருகப் பெற்றேன். அன்று ஸ்வாமியோடு கூடவே திருமாளிகைக்கு விடைகொண்டு நெடும்போது வார்த்தையாட நேர்ந்தது. அப்போது அடியேனுக்குண்டான ஆனந்தத்தை என்னவென்று எழுதுவேன்? அற்புதம்! அற்புதம்!! என்னலாமத்தனை.

திருமங்கையாழ்வாருடைய திருக்கண்ணபுரப் பதிகத்தில் (8-1) *கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரம்* என்பது முதற்பாசுரத்தில் சர்கை. குலசேகராழ்வார் (பெருமாள் திருமொழியில்) *கலைவலவர் தாம் வாழுங்கணபுரம்* என்றருளிச் செய்கிறார்; அதிற்காட்டிலும் *கலையிலங்குமொழியாளர் கண்ணபுரம்* என்பதில் சீரிய சுவையுள்ளது. மொழிகளில் கலையிலங்குமாம்; ஏதேனுமொருவார்த்தை பேசினாலும் அதிலும் ஶாஸ்த்ரார்த்தம் விளங்குமாம். காய்கறி விற்பவர்களோடு பேசினாலும் 'கலைவலவர் வல்லவர் இவர்' என்று தோன்ற நிற்குமாம். அந்தப் பாசுரம் அடியேனுக்கு நினைவுக்கு வரும்படி அன்று ஸ்ரீஸ்வாமி வார்த்தையாடியருளினது இன்று போலுள்ளது. பரமரஸிகர்! பரமரஸிகர்!!

[illegible]..ஸமீபத்தில் இரண்டுமூன்று ஸம்வத்ஸரங்களுக்குமுன் நம் தேவப் பெருமாளுக்கு மாசி மாதத்தில் தென்னேரியில் நடைபெறும் தெப்பவுத்ஸவத் திற்கு அடியேன் விடைகொண்டிருந்தபோது, அகரத்தில் ஒரு திருமாளிகையில் ஸ்ரீஸ்வாமியோடு ஒருமணிகாலம் வார்த்தையாட நேர்ந்தது. அப்போது ஸ்ரீஸ்வா[illegible] ஸன்னிதியில் ஒன்று ப்ரார்த்தித்தேன். "தேவப்பெருமாளுடைய இயல் கோஷ்டிக்கு தேவரீருடைய திருத்தம்பியார் நியமேந எழுந்தருளுகிறார்; அப்படியே தேவரீரும் ஸ்ரீகாஞ்சியில் எழுந்தருளியிருக்கிற நாட்களில் அவசியம் எழுந்தருளவேணும்" என்று அப்போது ஸ்ரீஸ்வாமி 'ராகப்ராப்தமானது தானே வைதமானால் கடுகப்பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியை ஸாதித்தருளி "அப்படியேயாகிறது" என்று திருவுள்ளமுவந்து ஸாதித்து, தேவப்பெருமாளுக்கு அடுத்த[illegible]டந்த தவனவுத்ஸவம் மூன்று நாட்களிலும் இடைவிடாது இயல் கோஷ்டியை அலங்கரித்து அனைவரையும் உகப்பித்தருளினார். அந்த பாக்கியம் அடிக்கடி நேருமென்று ஆசைகொண்டிருந் தேன். அந்தோ! இழந்தேன். உலகமிழந்தது.

[ப்ராஸங்கிகமொன்று.] இத்தகைய வைபவம் பொலிந்த மஹாஸ்வாமியின் சரம கைங்கர்யங்களில் அடியேன் பூர்த்தியாக அந்வயித்திருக்க வேண்டியவன். ஆனாலும் அஶக்தியின் மிகுதியினால் 'உபந்யாஸஸதஸ்ஸுக்கு மட்டுமே அந்வயிக்கும் பாக்கியம் பெற்றேன். இதுதன்னைப் பெரிய அக்ருத்யகரணமாக எண்ணின ஒருவர் (அல்லது சிலர் சேர்ந்தோ) மொட்டைக் கடிதமொன்று (போஸ்டு மூல மாக)விடுத்திருப்பது அவர்கள் தம்முடைய தௌர்ப்பாக்யத்தையே காட்டி நிற்கும்.

ஸ்ரீஸ்வாமியின் புகழ் என்றுமொன்று மெங்கணு மோங்கும்.

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
4. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
3. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code-631503

To
Sriman / Srimathi
P.A. Tiruvenkatachary,
690 16, M.M. Sannidhi Street,
Sriperumbudur

SRIPERUMBUDUR

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha,
Printed by E. Devarajan at Sri Kamakshi Press, 44-C, T. K. Nambi St.,
Kancheepuram-3.